# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 7 | இதழ் 12 | மே 10, 2021 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 7 | Issue 12 | May 10th, 2021 | Annual Subscription Rs. 100/-



## எதிர்கால பயத்தினை எதிர்கொள்வது எவ்வாறு ?



பகவத் பாதை தமிழ் மாத இதழ்

முடிவெடுக்க முடியாத சூழ்நிலையில் எது முக்கியமானது இறை நம்பிக்கையா? இறைவழிபாடா?
பிரார்த்தனை... நம்பிக்கை... ஒரு சிக்கலான சூழ்நிலையில் எது அவசியமானது?
பதில் – 3ஆம் பக்கத்தில்...

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

ஞானியர் அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

அனைவருக்கும் உழைப்பாளர்கள் தின நல்வாழ்த்துகளை தெரிவித்துக் கொள்கிறோம்.

புறம் சார்ந்த உழைப்பு மாண்புடன் உயர வழி வகுக்கும்.

அகம் சார்ந்த உழைப்பு மன உளைச்சலுக்குதான் வழி வகுக்கும்.

அகத்தளவில் அடைவதற்கோ சாதிப்பதற்கோ எதுவும் இல்லை. இவை அனைத்தும் புறம் சார்ந்ததே என்ற புரிதலே ஞானம்.

நம் முயற்சியின் பங்கு முழுவதும் புறம் சார்ந்து இருக்கும்போது, சாத்தியமானதைத் சாதிப்பதற்கான சக்தியையும், சாத்தியமில்லாததை ஏற்றுக் கொள்ளும் தன்மையையும் இப்புரிதல் வழங்கி விடுகிறது.

இப்புரிதலால் ஏற்படும் விளைவே அக விடுதலை – முக்தி ஆகும். விடுதலைதான் மன ஆரோக்கியம்.

மன ஆரோக்கியம் பெற்றவர்களே அனைத்து துயரங்களையும் கவலைகளையும் எளிதில் கடந்து நிம்மதியோடு வாழ்ந்து வருகிறார்கள்.

நமது ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானத் தெளிவு தற்போது பலரையும் சென்றடைந்து பயன் பெறச் செய்து கொண்டிருக்கிறது.

நேரடி ஞான முகாம் நடத்த முடியாத தற்போதைய சூழலிலும் Zoom Meeting வாயிலாக தினந்தோறும் நடைபெறும் சத்சங்கம் ஞானத் தெளிவு அனைவரையும் சென்றடைவதற்கு பேருதவியாக இருக்கிறது.

ஆன்மிகம் கற்றுத்தரும் பாடத்தை; வேதங்கள் கூறும் உண்மையை எப்படி பெறுவது?

இவை அனைத்தும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானப் புரிதலுக்குள் அடங்கிவிடுகிறது.

"அணுவைத் துளைத்து ஏழ் கடலைப்புகட்டிக் குறுகத் தரித்த குறள்"

–என்ற ஔவையின் வாக்கினைப் போல்,

எல்லா மதங்களும் ஆன்மிகமும் கூறும் உண்மைகள் அனைத்தையும் தன்னகத்தே கொண்டது இப்புரிதல்.

இதுவரை இவ்வுண்மையை ஸ்ரீ பகவத் ஐயா அவர்களைப்போல் இவ்வளவு எளிமையாக உரைத்தவர் எவருமில்லை.

புத்தருக்குப் பிறகு, ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு நம்மை உய்விக்க வந்த உத்தமர் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்.

"உனக்கு நீயே ஒளியாவாய்..."

"இக்கணத்தில் நீயே புத்தன்..." என்கிறோம்.

இவை என்ன அற்புதமான வார்த்தைகள்!

நாமும் ஒருநாள் ஆகத்தான் போகிறோம் என்ற கற்பனையைக் கடந்து, புரிதலால் நம்மை புனிதமாக்கியவர் ஸ்ரீ பகவத் ஐயா.

இவரால் ஞானத்தெளிவு பெற்றவர்கள் அனைவரும் சுய விளக்காக செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

அதாவது தனக்குத்தானே சுயஒளியாகவும் தன்னைச் சுற்றி இருப்பவர்களுக்கு வழிகாட்டியாகவும் செயல்பட்டு வருகிறார்கள்.

இந்த சுயஒளிகளின் எண்ணிக்கை எண்ணில் அடங்காமல் அதிகரிக்க வேண்டும்.

இதுவே நமது ஸ்ரீ பகவத் மிஷனின் நோக்கம்.

புத்தர்கள் வாழும் போது அவர்களை அடையாளம் காண்பது அரிது! காரணம் அவர்களது எளிமை.

நாம் அனைவரும் ஐயாவை அவரது எளிமையைக் கொண்டே அடையாளம் கண்டுகொள்வோமாக!!

## உள்ளே

| | |
|---|---|
| எதிர்கால பயத்தினை எதிர்கொள்வது எவ்வாறு? | 3 |
| கேள்வி பதில் | 6 |
| ஜென்கதை – "செத்தாரைப் போல் இரு" | 9 |
| ஸ்ரீபகவத் காட்டேஜ் திறப்பு விழா | 10 |
| நிகழ்ச்சி நிழல்கள் | 11 |
| அனைவருக்கும் ஓர் அன்பான வேண்டுகோள் | 12 |

கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555
This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075





# எதிர்கால பயத்தினை எதிர்கொள்வது எவ்வாறு ?

- ஸ்ரீ பகவத்

ஆன்மிகம் என்ற பெயரில் ஒரு காலத்தில் வினோதமான அனுபவங்களைத் தேடிக்கொண்டிருந்தோம். அனுபவங்களைச் சார்ந்ததல்ல ஆன்மிகம் என்பதை அதன் பிறகு தெரிந்து கொண்டோம்.

அனுபவங்களைத் தேடி அலைந்த நாம் இப்போது எந்த அனுபவங்களையும் தேடி அலைவதில்லை. இதனால் எதனையோ அடையவேண்டும் என்ற ஏக்கம் நம்மை விட்டுப் போய்விட்டது. எதனையும் அடையத் தேவையில்லை யென்ற நிம்மதிப் பெருமூச்சு நம்மிடமிருந்து வெளிப்பட்டு விட்டது.

இதற்கு முன்னால் நமக்கு ஏற்பட்ட மனக் கஷ்டங்களிலிருந்து விடுபட எப்படியெல்லாமோ போராடிக் கொண்டிருந்தோம். அவற்றிலிருந்து விடுபடும் நோக்கத்துடனேயே ஆன்மிகப் பயிற்சி முயற்சிகள் பலவற்றில் ஈடுபட்டு வந்தோம்.

இன்பமான மன அனுபவங்கள் எப்படித் தாமாக மறைந்துவிடுகின்றனவோ அப்படியே துன்பமான மன அனுபவங்களும் தாமாக மறைந்து விடுகின்றன என்பதை தற்போது கண்டுபிடித்து விட்டோம்.

இதனால் நாம் நமக்கு ஏற்படும் துன்பமான மன அனுபவங்களிலிருந்து விடுபடப் போராடுவதிலிருந்தும் விடுபட்டுவிட்டோம்.

இந்த நிலையில் நாம் மன விடுதலை யோடும், போராட்டமும் இல்லாமல் நிம்மதியாகத் தானே இருக்க வேண்டும்?

புரிந்துகொண்ட - விடுதலை பெற்ற நாம் அனைவரும் இந்த நிம்மதியில் நிலை பெற்றுள்ளோமா?

காலங்காலமாக ஆன்மிகம் என்ற பெயரில் உலகத்துச் செயல்பாடுகளை இரண்டாம்பட்சமாக்கிப் பழித்து வந்தனர். அவற்றிலிருந்து விடுபடும் துறவு நெறிக்கே முக்கியத்துவம் கொடுத்து வந்தனர்.

நாம் மட்டுமே உலக வாழ்க்கைக்குப் பிரதானமான முக்கியத்துவமளித்து, அதற்கு உதவியான துணை அம்சமாகத்தான் ஆன்மிகத்தை எடுத்துக் கொண்டுள்ளோம்.

இதனால் பலரும் உலகியல் துறைகளில் நல்ல விதமான முன்னேற்றங்களை அடைந்துள்ளனர். பலருடைய வாழ்க்கைத் தரம் பெருவாரியாக உயர்ந்திருக்கின்றது.

ஆனால் புற உலக வாழ்க்கை என்பது சீராக வடிவமைக்கப்பட்ட தேசிய நெடுஞ்சாலையல்ல.

ஏற்ற இறக்கங்கள் மிகுந்த கரடுமுரடான காட்டுப் பாதைகள் பலவற்றையும் உள்ளடக்கியதுதான் நாம் பயணம் செய்ய வேண்டிய பகுதி.

நாம் பாலைவனங்கள் பலவற்றைக் கடந்து செல்ல நேரிடலாம்.

அதற்காக அனைத்தும் பிரச்சனைக்குரிய வைகளாகவே இருக்கும் என்ற அர்த்தமில்லை. நல்லவிதமான சூழ்நிலைகளும், அருமையான பாதைகளுங்கூட அமைந்திருக்கலாம்.

ஆனால் நல்லவிதமான அம்சங்கள் எவையும் நமக்குப் பிரச்சினையாக இல்லாத காரணத்தால் அவற்றுக்கு நாம் முக்கியத்துவமளித்துப் பேசுவதில்லை.

பிரச்சினைக்குரிய அம்சங்களை நாம் சந்திக்கும் போதுதான், அவற்றிலிருந்து விடுபட வேண்டும் என்ற உந்துதல் ஏற்பட்டுவிடுகின்றது.

இதனால் சிலர் மீண்டும் நிம்மதியற்ற மன நிலைக்குச் சென்றுவிடுகின்றனர்.

இந்நிலையில் நாம் என்ன செய்ய வேண்டும்?

மனதைச் சமநிலையில் வைத்திடுவதற்கான பயிற்சி முயற்சிகளில் ஈடுபட வேண்டுமா?

அப்படி பயிற்சி முயற்சிகளில் ஈடுபடுவதென்பது ஆன்மிக உலகின் ஆரம்ப கால அணுகுமுறை.

இப்போது அவை நமக்குத் தேவையில்லை.

புற உலகத்துப் பிரச்சனையை நாம் எதிர்கொள்ளும்போது நம் மனதில் ஏற்படும் உணர்ச்சிகள் அனைத்தும் செயல் அம்சமானவை அல்ல. Action அல்ல.

அவை அனைத்தும் Reaction மட்டுமே. – எதிர்விளைவு மட்டுமே.

– விளைவு அம்சம் மட்டுமே.

தேவைக்கு வேண்டுமானால் புறச் செயல்களின் பயன்பாட்டுக்கு எடுத்துக் கொள்ளலாம்.

Reaction அனைத்தும், அவை தோன்றும்போது unconscious ஆகவே உள்ளன.

அவை மறையும் போது தான், அவை அனைத்தும் நாம் அறியும் நிலைக்கு வருகின்றன.

அறியா நிலையில் ஏற்பட்ட உணர்ச்சிகள் யாவும், அறியா நிலையிலேயே பிரவாகமாகி மறைந்து விடுகின்றன.

அவற்றின் இரண்டாவது அடுக்காக ஏற்படும் அறிந்த உணர்ச்சிகள் தாம் நாம் நிர்வாகம் செய்யும் தகுதியுடன் உள்ளன.

அவற்றை நாம் நமது செயல்களுக்கு பயன்படுத்திக் கொள்ளலாம்.

– அல்லது செயல்கள் எவற்றுக்கும் அவை தேவையில்லை என்ற முடிவுக்கு வந்துவிடலாம்.

அப்படி முடிவெடுத்து அவற்றை நமது பயன்பாட்டுக்கு எடுத்துக் கொள்ளாமல் விட்டு விட்டாலே போதும்.

அவை யாகவே ஓடி மறைந்துவிடும்.

ஆனால் என்ன நடந்து விடுகின்றது?

ஓர் உதாரணத்தை எடுத்துக் கொள்வோம்.

இப்போதுள்ள சூழ்நிலையில் கொரானா என்னும் தொற்றுநோய் அலை அலையாகப் பரவி வருகிறது.

சரியான மருந்து இதுவரை கண்டுபிடிக்காத காரணத்தால்,

தடுப்பு நடவடிக்கைகளில் மட்டுமே அதிக கவனத்தைச் செலுத்த வேண்டிய நிலையில் உள்ளோம்.

நோய் சம்பந்தமான ஒரு பய உணர்வு நமக்கு ஏற்படுவதாக வைத்துக்கொள்வோம்.

அந்த உணர்வை பயன்படுத்தி ஓரளவு பாதுகாப்பு நடவடிக்கைகளையும் மேற்கொள்கிறோம்

அதற்குப் பிறகும் அந்த பய உணர்வு அடிக்கடி வந்து கொண்டுதான் இருக்கிறது. அதனைப் பயன்படுத்தி அதற்கு மேலும் செய்வதற்கு எதுவும் இல்லை.

ஆனாலும்கூட அந்த பய உணர்வை முழுவதுமாகக் கைவிடாமல்,

"மேற்கொண்டு என்ன பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம்?" – என்ற ரீதியான சிந்தனைகளையே ஊக்குவித்து விடுகிறோம்.

இதனால் பிரவாகமாகி மறைய வேண்டிய அந்த உணர்வு

நமக்குள் ஏதோ ஒருவகையில் வேர் விட ஆரம்பித்து விடுகின்றது.

விளைவாக தேவையற்ற எதிர்மறைச் சிந்தனைகள் பல உருவாகும் வாய்ப்பும் ஏற்பட்டு விடுகின்றது.

எச்சரிக்கை உணர்வு தேவைதான். ஆனால் எச்சரிக்கை உணர்வை அதிகமாகத் தூண்டும் தேவையற்ற

எதிர்மறைச் சிந்தனைகளிலிருந்து விடுபட வேண்டுவதும் அவசியமே.

இல்லாவிடில் நமது அன்றாடச் செயல்களின் தரமும் கூடக் குறைந்து விடும். தடுமாற்றமே தலை தூக்கிவிடும்.

இப்போது நமது அணுகுமுறையை எவ்வாறு அமைத்துக் கொள்வது?

சில தினங்களுக்கு முன்னால் அன்பர் ஒருவர் அலைபேசியில் தொடர்பு கொண்டு பேசினார்.

கொரானா தொற்று நோயினால் பாதிக்கப்பட்டு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுள்ளதாகவும், படுக்கையிலிருந்து கொண்டுதான் பேசுவதாகவும் கூறினார்.

அவர் கொரானா பற்றியோ, அது சம்பந்தமான பயம் பற்றியோ எதுவுமே கேட்கவில்லை.

மாறாக அவருடைய தொழில் முன்னேற்றம், வருவாய் ஈட்டுதல் ஆகியவை சம்பந்தமான ஆலோசனைகளை மட்டுமே கேட்டார்.

கொரானா வருவதற்கு முன்னால் "கொரானா வந்துவிடுமோ?" என்ற பயம் இருக்கலாம்.

ஆனால் அது வந்து விட்ட பிறகு அந்த பயம் இல்லாமற் போய் விடுகிறது.

உண்மையில் நமது பயங்கள் அனைத்தும் எதிர்காலத்தை எதிர்கொள்வது சம்பந்தமாகவே உள்ளன.

நாம் பயப்பட்டுக் கொண்டிருந்த ஆபத்து நிஜமாகவே நிகழ்ந்துவிட்ட போது,

அது ஒரு நிகழ்காலப் பிரச்சினையாகிவிடுகிறது.

நாம் செய்யவேண்டிய நிகழ்காலச் செயல் சம்பந்தமாக நம்மால் முடிவுகளை எடுத்துக் கொள்ள முடியும்.

ஆனால் நிச்சயமில்லாத எதிர்காலம் சம்பந்தமாக நம்மால் என்ன முடிவுகளை எடுத்திட

முடியும்?

நாம் செய்யவேண்டிய செயல்களோடு நாம் நமது முடிவுகளை இணைத்துக் கொள்ளும்போது

நமது செயல்களில் ஏற்படும் தடுமாற்றங்கள் மறைந்துவிடும்.

நிச்சயமற்ற எதிர்காலம் சம்பந்தமாகவும் நாம் ஏதாவது ஒரு முடிவுக்கு வந்தால் மட்டுமே

அவை ஏற்படுத்தும் தேவையற்ற பயமுறுத்தல்களிலிருந்து விடுபட முடியும்.

நாம் ஏற்கனவே நாம் எடுக்க வேண்டிய முடிவுகள் சம்பந்தமாக சிந்தனைகளை மேற்கொண்டிருக்கின்றோம்.

மூன்று வகையான முடிவுகளில் ஏதாவது ஒரு வகையான முடிவை நாம் எடுத்திட வேண்டும் என்பதைப் பார்த்திருக்கிறோம்.

செயல்களைத் தொடர்ந்து ஈடுபாட்டுடன் செய்ய வேண்டும் என்பது முதலாவது வகை முடிவு.

இந்தச் செயலைச் செய்யக் கூடாது. அதைச் செய்ய வேண்டாம் என்பது இரண்டாவது வகையான முடிவு.

செய்யவேண்டிய செயலாகவும் இருக்கலாம்; அல்லது கைவிட வேண்டிய செயலாகவும் இருக்கலாம். ஆனால் இன்றைய நிலையில் வேண்டும் அல்லது வேண்டாம் என்ற தீர்மானமான முடிவை எடுக்க முடியாமல் இருக்கலாம். ஆகவே நாம் காத்திருக்க வேண்டிய சூழ்நிலையில் உள்ளோம்.

இதனால் "காத்திருப்போம்" என்ற முடிவை எடுத்துக் கொள்ளலாம்.

இதுதான் மூன்றாவது வகையான முடிவு.

இந்த மூன்றாவது வகை முடிவுக்கான சூழ்நிலைகள்தாம் பல சந்தர்ப்பங்களில் முதலாவது வகையைப் போல தோன்றி

நம்மை பயமுறுத்திவருகின்றன.

அத்தகைய சூழ்நிலைகளில், "பொறுத்திருப்போம்" என்று முடிவு செய்துவிட வேண்டும்.

இதனால் தேவையற்ற எதிர்மறைச் சிந்தனைகள் வெகுவாகக் குறைந்து விடுகிறது.

நம் ஒவ்வொருவருடைய அடி மனதிற்க்கும் அடியில்

ஆழ்மனது – Deeper Conscious Mind என ஓர் அம்சம் உள்ளது.

மறைந்து கிடக்கும் பிரபஞ்ச ஆற்றல்கள் அடங்கிய ஓர் இரகசிய அம்சமாக அது உள்ளது.

நமது வெளிமனதின் கட்டுப்பாட்டினுள் அது வராவிட்டாலுங்கூட அந்த ஆழ் மனதும் நமக்குச் சொந்தமான ஓர் அம்சமே. நமக்குத் தேவையான உதவிகளை அதுவே நமக்கு வழங்கிவிடும்.

முடிவெடுக்க முடியாமல் "காத்திருப்போம்" என்ற மூன்றாவது முடிவுக்குத் துணையாக இந்த ஆழ் மனதையும் நாம் எடுத்துக் கொள்ளலாம்.

அனைத்து மதங்களிலுமே இறை நம்பிக்கை மற்றும் வழிபாடுகள் வலியுறுத்தப்பட்டு வருகின்றன.

நாம் குறிப்பிடும் நமது ஆழ்மனது என்பதும் இறைவன் என்பதும் வேறு வேறு அல்ல. இரண்டும் ஒன்றே.

மேலே குறிப்பிட்ட மூன்று முடிவுகளில் மூன்றாவது முடிவு என்பதும் இறை நம்பிக்கை என்பதும் ஒன்றே.

இறை நம்பிக்கை வேறு, இறைவழிபாடு வேறு.

இறை நம்பிக்கையே பிரதானமானது. இறைவழிபாடு என்பது இரண்டாம் பட்சமானதே.

இறை நம்பிக்கை வேறு, தன்னம்பிக்கை வேறு அல்ல. இரண்டும் ஒன்றுதான்.

தன்னம்பிக்கை என்பது நேரடியான தன்னம்பிக்கை. இறை நம்பிக்கை என்பது மறைமுகமான தன்னம்பிக்கை.

"என்னால் வெற்றிபெற முடியும்" என எண்ணுவதும் ஒன்றுதான்;

"இறைவன் எனக்கு வெற்றியையே அருள்வான்" என நம்புவதும் ஒன்றுதான்.

ஆகவே முடிவெடுக்க முடியாத பிரச்சினைகளில் முடிவை ஏற்படுத்தும் பொறுப்பை இறைவனிடமோ

அல்லது நம் ஆழ்மனதிடமோ விட்டுவிட்டு நாம் செய்ய வேண்டிய பணிகளை

முழு ஈடுபாட்டுடன் செய்வோமாயின்

நாம் மேற்கொள்ளும் செயல்கள் அனைத்தும் வெற்றி பெறும்.

தேவையற்ற மனக் கலக்கங்கள் யாவும் நம்மை விட்டு அகன்றோடிவிடும்.

நமது வெற்றிக்காக நாம் இறைவனிடம் பிரார்த்தனை ஏதாவது செய்ய வேண்டுமா?

பிரார்த்தனை வேறு, நம்பிக்கை வேறு. பிரார்த்தனைகள் அனைத்தும் நம்பிக்கை இல்லாமையையே காட்டுகிறது.

பிரார்த்தனை என்பது நமது வீட்டுக்கு வரச்சொல்லி அழைக்கும் அழைப்பிதழ் மட்டுமே.

நம்பிக்கை என்பது வீட்டுக்கு வந்திருப்பவரைப் பராமரிக்கும் செயல்முறை.

நிச்சயமற்ற எதிர்காலத்தை இறைவன் கைகளிலோ, இயற்கையின் கைகளிலோ அல்லது நம் ஆழ்மனதில் அரவணைப்பிலோ விட்டுவிட்டு

முதலிரண்டு முடிவுகளில் நாம் முழுமையாக ஈடுபடுவோமாக.



V.A.P. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி பதில்...

## தேவையற்ற தகவலும் தேவையற்ற பயமும்

**கேள்வி :** நான் பகவத் ஐயாவின் நூல்களைப் படிப்பது, youtube வீடியோக்களைப் பார்ப்பதோடு தினமும் zoom மீட்டிங் பார்த்து கொண்டும் வருகிறேன்.

அகத்தில் செய்வதற்கு எதுவும் இல்லை. புறத்தில்தான் நாம் செயல்படுவதற்கான வாய்ப்புள்ளது என்பது நன்றாகப் புரிகிறது.

பொதுவாகவே எனக்கு எதிர்காலத்தைப் பற்றிய பயம் அதிகமாக உண்டு. இன்றைய கால சூழ்நிலையில் இளம் வயதிலேயே எல்லா வியாதிகளும் வந்துவிடுகின்றன. பொதுவாக நாம் பார்க்கும் பல செய்திகள் நிச்சயமற்ற எதிர்காலத்தை வெளிப்படுத்துகிறது. வாழ்வில் விரைவாக வெற்றிபெற வேண்டும் என்பதற்காக பல்வேறு துறைகள் சம்பந்தமான விஷயங்களை அதிகமாக யோசிப்பது உண்டு.

நிரந்தரமான, பாதுகாப்பான எதிர்காலத்தை உருவாக்க வேண்டும் என்பது எனது லட்சியம்.

அதற்கு உதவியாக பல்வேறு துறை வல்லுனர்களின் ஆலோசனைகளை YouTube-ல் பார்ப்பது, google-ல் தேடுவது என்பது எப்பொழுதும் உண்டு. இதனால் இரவு தூக்கம் வராத அளவிற்கு சிந்தனை ஓட்டம் ஓடிக்கொண்டே இருக்கிறது.

அதிகப்படியான சிந்தனை ஓட்டத்தினால் மிகவும் களைப்பும், சோர்வையும் அடைகிறேன்.

நான் எதிர்கால வளர்ச்சியைப் பற்றி சிந்திப்பது தவறா? எதிர்காலத்தில் பாதுகாப்பாக இருப்பதற்கு என்ன செய்வது?

**பதில் :** உங்களைப்போல் இன்று பலரும் வளமான எதிர்காலத்தை உருவாக்க வேண்டும் என்ற அடிப்படையில் இப்படி அதிகப்படியான சிந்தனைகளால் அவதிப்படுகிறார்கள். இதற்கெல்லாம் அடிப்படையில் என்ன காரணம்?

"மலையளவு யோசிப்பதைவிட கடுகளவு செயல் சிறந்தது", "அகல உழுவதைவிட ஆழ உழுவது சிறந்தது". என கூறுவதைக் கேட்டிருப்பீர்கள். நீங்கள் பல துறைகளைப் பற்றி யோசிப்பதில் எந்தத் தவறும் இல்லை.

ஆனால் எல்லா துறையிலும் நம்மால் செயல்பட முடியாது. நம் அறிவுக்கு சரி என்று படுவது எது? நம் இயல்பிற்கு ஒத்துப் போவது எது? என ஆராய்ந்து அந்தத் துறையைத் தேர்வு செய்ய வேண்டும். துறையை முடிவு செய்த பிறகு அதைப்பற்றி ஆழமாக சிந்தித்து செயல்பட வேண்டும்.

திரைப்படங்களில் ஒரு பாடலில் பெரிய செல்வந்தனாக மாறுவதுபோல் நடைமுறை வாழ்க்கையில் ஒரு போதும் நிகழாது.

நடைமுறை யதார்த்த வாழ்க்கையில் அடுத்து என்ன நிகழும் என்பது யாருக்கும் தெரியாது. என்ன நடக்கும் என்பது தெரியாதபோதே நாம் இவ்வளவு அவதிக்கு உள்ளாகிறோம். என்ன நடக்கும் என்பது முன்கூட்டியே நமக்கு தெரிந்தால் இப்பொழுது இருக்கும் நிலையை விட இன்னும் மோசமான நிலையில்தான் நாம் இருப்போம்.

நம் தேர்ந்தெடுத்த துறையின் வளர்ச்சிக்கு தேவையான தகவல்களை சிந்திப்பது, அதற்கான வல்லுனர்களின் ஆலோசனைகளையும் உதவிக்கு எடுத்துக்கொள்வது, அது சம்பந்தமாக இதுவரை நாம்

சேகரித்து இருக்கும் அறிவுடன் இணைத்து கொண்டு செயல்படும்போது நாம் படிப்படியாக வளர்ச்சியை அடைய முடியும்.

தேவையற்ற பல விஷயங்களைப் பற்றிய அதிகப்படியான சிந்தனைதான் அதிகப்படியான மன உளைச்சலை உருவாக்குகிறது.

முதலில் ஞானம் என்றால் என்ன? விடுதலை என்றால் என்ன? – என்ற தெளிவான முடிவுக்கு வந்து விடுவோம்.

மனதின் இயற்கையான இயக்கத்தில் நமது அறிவுக்கு எந்த வேலையும் இல்லை என்பதை நமக்குள் புரிந்து கொள்வதே ஞானம்.

இப்படிப் புரிந்துகொண்டு மன இயக்கத்தில் அறிவு குறிக்கிடாமல் போராடாமல் விட்டு விடும்போது மனம் இயற்கையான இயக்கமான பிரவாகமாக மாறிவிடுகிறது.

இப்படி இயங்கும் மனதைத் தான் விடுதலையுடன் இயங்கும் மனம் என்று குறிப்பிடுகிறோம்.

இப்படி நமது அறிவு தனது அகத்தளவில் இயலாமையை உணர்ந்து கொண்டு அகத்தை நிர்வாகம் செய்யாமல் புறத்தில் செயல் பக்கம் திரும்பி விடுகிறது.

புறச் செயல்களில் வெற்றி பெற வேண்டும். எதிர்காலத்தில் பொருளாதாரத்தில் நிறைவுடன் வாழ வேண்டும் என்ற ஏக்கம், இன்று எல்லோருக்கும் உண்டு.

புறத்தில் வெற்றி பெற, தேவையான தகவல்களைத் தெரிந்துகொள்ள வேண்டும்; தேவையான முயற்சிகளை எடுக்க வேண்டும். அப்போதுதான் நம்மால் வெற்றி பெற முடியும். அதில் எந்தத் தவறும் இல்லை.

உதாரணமாக நாம் கார் ஓட்டுவதற்கு கார் மெக்கானிக்காக இருக்க வேண்டிய அவசியம் இல்லை. காரை ஓட்டுவதற்கு எது பிரேக், எது ஆக்சிலேட்டர், எது கிளட்ச், ஸ்டேரிங்கை எப்படி இயக்க வேண்டும், டேஷ்போர்டில் இருக்கும் ஒவ்வொரு இண்டிகேட்டரும் எதைக் குறிப்பிடுகின்றன போன்ற விபரங்கள் தெரிந்து இருக்க வேண்டும்.

பெட்ரோல் எங்கே போடுவது, கார் டயர் பஞ்சர் ஆகிவிட்டால் நாம் எப்படி டயரை மாற்றுவது, டயரில் காற்றின் அளவு எவ்வளவு வைக்க வேண்டும், எத்தனை கிலோ மீட்டருக்கு ஒரு முறை சர்வீஸ் விட வேண்டும் என்ற அடிப்படையான சில தகவல்களைத் தெரிந்து கொண்டால் போதும். இதற்கு மேலும் வேறு ஏதாவது பிரச்சினை ஏற்பட்டால் கார் மெக்கானிக்கை தொடர்புகொண்டு அந்த பிரச்சினைக்கு தீர்வு காண வேண்டும். நாம் பயன்படுத்தும் எல்லாப் பொருட்களின் தொழில்நுட்பமும் நமக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை.

அந்தப் பொருளை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்ற அடிப்படை அறிவு இருந்தால் மட்டும் போதும்.

நாம் பயன்படுத்தும் எல்லாப் பொருட்களின் தொழில் நுட்பத்தையும் நாம் தெரிந்து கொண்டுதான் பயன்படுத்த வேண்டும் என்ற முடிவுக்கு வந்தால் நம்மால் பல பொருட்களை பயன்படுத்தவே முடியாது.

அத்தியாவசியமான விசயத்திற்கு ஆழமாகவும் சாதாரணமான விஷயங்களுக்கு மேலோட்டமாகவும் சிந்தித்துக் கொண்டால் போதும். எல்லாவற்றையும் ஆழமாகத் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமும் இல்லை.

தேவையற்ற பல விஷயங்களைப் பற்றி அதிகமாக சிந்திப்பதுதான் பல்வேறு பிரச்சனைகளையும் உபாதைகளையும் ஏற்படுத்துகின்றன. மேலும் நம் மனதுக்குள்ளும் தேவையற்ற பீதியையும் ஏற்படுத்தி விடுகிறது.

உதாரணமாக மருத்துவர் பரிந்துரைக்கும் பரிசோதனை விபரங்களை துருவித் துருவி ஆராய்வது, நமக்கு வந்திருக்கும் நோய் பற்றிய விபரங்களை இணையத்தளங்களில் தேடுவது, அதற்கு மருத்துவர் பரிந்துரைக்கும் மருந்துகள் பற்றிய விபரங்களை அலசி ஆராய்வது போன்றவை நம்மை மேலும் சிக்கலில் ஆழ்த்திவிடுகிறது.

நமக்கு உடலில் ஏதோ ஒரு பிரச்சினை ஏற்பட்டுள்ளது என வைத்துக் கொள்வோம். அதற்கு டாக்டரின் ஆலோசனை, மேலும் அதற்கு அவர் கூறும் உணவு கட்டுப்பாடு, மருந்து மாத்திரைகளை எடுத்துக்கொள்ளும் வழிமுறைகள் என்ன என்பதோடு முடித்துக்கொள்ள வேண்டும். அதை விடுத்து நாம் இணையதளத்தில் அது சம்பந்தமாக 'நாம் தெரிந்து கொள்கிறோம்' என்ற பெயரில் தேடுதலில் இறங்கினால் என்னவாகும்?

நமக்கு சாதகமான சில தகவல்களும் பாதகமான பல்வேறு தகவல்களும் கிடைக்கும்போது, அவை பயத்தை ஏற்படுத்தி விடும்.

இதனால் நம் மனதில் தேவையற்ற பயம் ஏற்பட்டு விடும்.

ஒரு வியாதியைத் தொடர்ந்து அடுத்த பல்வேறு வியாதிகள் என நம்மை பிடித்துக் கொள்வது போன்ற எண்ணம் ஏற்பட்டு விடும். இப்படி பல பிரச்சனைகளை நாம் சந்திக்க நேர்ந்து விடுகிறது.

சாதாரணமாக ஏற்படும் தலைவலி அல்லது வயிற்று வலி என்று ஏதோ ஒரு பிரச்சினையைப் பற்றி இணையதளங்களில் தேடத் தொடங்கினால் என்னவாகும்? அதற்கான தகவல்கள் அதாவது தலைவலி என்பது கேன்சராகக் கூட இருக்கலாம் என்ற அளவிற்கு போய்விடுகிறது.

தூக்கமின்மைக்கான காரணத்தை அறியத் தொடங்கினால் அது நமக்கு மனோவியாதி ஏற்பட்டுள்ளது என்ற அளவிற்குக் கொண்டு போய்விடுகிறது.

மருத்துவர்களின் உதவிக்காக கொடுக்கப்பட்டிருக்கும் தகவல்கள் நமக்கு உபத்திரவமாக மாறிவிடுகின்றன.

நமக்கு பக்கபலமாக இருக்க வேண்டிய தகவல்கள் நமக்கு பயத்தையும் பீதியையும் ஏற்படுத்தி விடுகின்றன. அந்தத் தகவல்கள் அனைத்தும் உண்மை என நாம் நம்பத் தொடங்கி விடுகிறோம். பிறகு அதற்கான இரசாயன மாற்றங்கள் நமக்கு ஏற்படத் தொடங்கி விடுகின்றன. நாம் இருக்கும் நிலையை விட மேலும் மோசமான நிலையை அடைந்து விடுகின்றோம்.

உடலும் மனமும் தன்னைத் தானே சரிபடுத்திக்கொள்ளும் என்ற மாபெரும் உண்மையை உணராமல் நாம் மிகவும் பாதிப்பு அடைகிறோம்.

நமக்குத் தேவையான தகவல்களை சிந்திப்பதில் எந்தத் தவறும் இல்லை. வளர்ச்சிக்காக சிந்திப்பதில் எந்தத் தவறும் இல்லை.

தேவையற்ற பல்வேறு தகவல்களை சிந்திப்பதால் அனுகூலங்களைவிட ஆபத்தே அதிகமாக உள்ளது. இப்படி இன்றைய இளைய தலைமுறையினர் இப்படிப்பட்ட தேடுதலில் இருப்பதினால் மிகவும் மன உளைச்சலுக்கு உள்ளாகி இருக்கிறார்கள்.

இளைஞர்கள், படித்தவர்கள் என பலர் இதனால் மிகவும் மனநலம் பாதிப்படைந்து இருக்கிறார்கள்.

அதனால் நமக்கு எல்லாத் தகவல்களும் தெரிந்திருக்க வேண்டிய அவசியமில்லை. தேவையானதை மட்டும் தெரிந்துகொண்டால் போதும் என்று முடித்துக்கொள்வதால் மட்டுமே நிறைவாக வாழ முடியும்.

எதிர்காலத்தில் நிறைவாகவும் பாதுகாப்பாகவும் வாழ்வதற்குத் தேவையான எதிர்காலத் திட்டங்களை முறையாக திட்டமிட்டு செயல்படுத்திக் கொள்ள வேண்டும்.

தேவையற்ற பல செயல்களை, சிந்தனைகளை குறைத்துக்கொண்டு நம் துறையில் முழு கவனத்துடன் உழைக்கும் போது

ஒரு வருடத்திற்கு அடுத்த வருடம் என படிப்படியாகதான் முன்னேற முடியும்.

இப்படி மட்டும்தான் நம்மால் உயரவும் முடியும்.

எதிர்கால பயம், பாதுகாப்பின்மை போன்றவை அனைத்தும் அக உணர்ச்சிகள்.

அந்த அக உணர்ச்சி சம்பந்தமாக நாம் ஒன்றும் செய்ய முடியாது.

அதற்கு புறம் சார்ந்த பாதுகாப்பான செயல் என்ன என்பதை திட்டமிட்டு செயல்படுத்திக் கொள்ள முடியும்.

இப்படி மட்டும்தான் ஒரு பாதுகாப்பான எதிர்காலத்தை நம்மால் உருவாக்க முடியும்.




# "செத்தாரைப் போல் இரு"

ஒருவன் தன் மனப் பிரச்சினையை எதிர்கொள்ளத் தெரியாமல் மிகவும் அவதிப்பட்டான்.

ஞானி ஒருவரை சந்தித்து தன் மன நிலையை எடுத்துக் கூறினான்.

"சுவாமி, என் மனம் எப்போதும் என்னை குறை கூறிக் கொண்டே இருக்கிறது. 'நீ எதற்கும் உபயோகமற்றவன்', 'உன்னால் ஒரு வேலையைக் கூட சரியாகச் செய்ய முடியாது' என்று எந்த வேலையை செய்யத் தொடங்கும் போதும் இப்படி சதா சொல்லிக் கொண்டே இருக்கிறது. இதனோடு சண்டையிடுவதே எனக்கு மிகப்பெரிய போராட்டமாக இருக்கிறது...

"இதிலிருந்து விடுபட்டு எப்படி நான் நல்ல முறையில் செயல்படுவது?"

ஞானி, "உன் மனம் சொல்வதை கண்டு கொள்ளாதே. உன் கவனத்தை உன் செயலின் பக்கம் திருப்பு. செயல் நன்றாக இருக்கும்" என்றார்.

"சுவாமி, கவனத்தை செயலின் பக்கம் செலுத்தினாலும் மனம் இப்படி சொல்லிக் கொண்டேதான் இருக்கிறது. என்ன தான் செய்வது?" என்றான் அவன்.

"நீ மனதளவில் சும்மா இரு" என்றார்.

"சும்மா இருப்பது என்றால் எப்படி சுவாமி?" என்றான்.

"மனம் ஏதேதோ சொல்லிக் கொண்டேதான் இருக்கும். அப்படி சொல்லிக்கொண்டிருப்பதற்கு நீ ஒன்றும் செய்யாமல் இருப்பதுதான் சும்மா இருப்பது" என்றார்.

"என்னை மன்னியுங்கள் சுவாமி. நீங்கள் கூறுவது இந்த மரமண்டைக்குப் புரியவில்லை. எனக்கு சுளீரென்று உரைக்கும் படி ஏதோ ஒருவகையில் புரிய வையுங்கள்" என்றான்.

"சுடுகாட்டிற்குச் செல். அங்கே கிடக்கும் பிணத்திடம் உன்னால் எவ்வளவு இழிவாகப் பேச முடியுமோ அவ்வளவு இழிவாகப் பேசு" என்றார்.

மறுநாள் திரும்பிய அவன் "நீங்கள் சொன்னது போல் பேசிவிட்டேன்" என்றான்.

"இழிவாகப் பேசியதற்கு அந்தப் பிணம் உன்னைப் பதிலுக்கு ஏதாவது திட்டியதா?"

"இல்லை."

"இன்றும் அங்கே செல். பிணத்தை எவ்வளவு புகழ்ந்து பேச முடியுமோ அவ்வளவு புகழ்ந்து பேசு."என்றார்

அடுத்த நாள் அங்கே வந்த அவன் "நீங்கள் சொன்னது போல் புகழ்ந்து பேசிவிட்டேன் " என்றான்.

"இப்போது பிணம் ஏதாவது பேசியதா?"

"எதுவும் பேசவில்லை."

"அந்த பிணம், நீ பேசிய புகழ்ச்சிக்கும் இகழ்ச்சிக்கும் எப்படி உன்னிடம் நடந்து கொண்டதோ அதைப்போலவே நீ உன் மனதிடம் நடந்து கொள். அப்படி நீ உன் மனதிடம் நடந்து கொண்டால் உன் மனப் பிரச்சினையில் இருந்து விடுபடலாம்" என்றார் அவர்.

அதற்குப் பிறகும் அவன் மனம் ஏதாவது குறை சொல்லிக் கொண்டுதான் இருந்தது. அவன் அகத்தளவில் செத்தவனாக இருந்து, புற வேலைகளில் கவனத்தை செலுத்தினான். நாளடைவில் அவன் மனம் அவ்வாறு பேசுவதையும் நிறுத்திக் கொண்டது.

# ஸ்ரீபகவத் காட்டேஜ் திறப்பு விழா

**ஸ்ரீ பகவத் குழல்கள்**

அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரியகவுண்டாபுரத்தில் இயற்கை எழில்மிகு ஜருகுமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் இருப்பிடமான இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்றுவருகிறது. இதில் பலரும் கலந்துகொண்டு ஞானத் தெளிவு பெற்றுச் செல்கின்றனர்.

முகாம்களுக்குக் குடும்பத்துடன் வருபவர்கள் சேர்ந்து தங்குவதற்கு போதிய வசதியில்லாததால் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கி செல்வதற்கு ஏற்ற வகையில் எல்லா வசதிகளுடன் கூடிய 8 பெரிய (11'x16') அறைகளும் 8 சிறிய (8'x8') அறைகளும் தனித்தனி குளியலறைகளுடன் (4'x6') அமைக்கப்பட்டு நிறைவடைந்துள்ளது.

ஸ்ரீபகவத் காட்டேஜ் திறப்பு விழா 25-2-2021 வியாழக்கிழமை அன்று காலை 11 மணிக்கு சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் திருக்கரங்களால் திறந்து வைக்கப்பட்டது.

இதனைத் தொடர்ந்து ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் 'இந்த காட்டேஜ் எதற்கு, அதன் தேவை என்ன, நம் நோக்கம் என்ன' என்பதைப் பற்றி விளக்கமாக ஒரு உரை நிகழ்த்தினார்.

இவ்விழா நமது ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப விழாவாக 50 அன்பர்களுடன் சிறப்பாக நடந்தேறியது.

இவ்விழாவிற்கு முதல் நாளே புதன்கிழமை அன்று ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்கள் தங்கள் குடும்பத்துடன் தம்பதிகளாக வந்து ஒன்றுகூடி தங்கி, உணவருந்தி ஐயாவுடன் உரையாடி மகிழ்ந்திருந்து விழாவை கோலாகலமாக கொண்டாடினர்.

இத் திறப்பு விழா ஒரு குடும்ப நிகழ்ச்சியில் எப்படி இருக்குமோ அப்படியே இருந்தது.

அனைத்து ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்களையும் ஸ்ரீ பகவத் மிஷன் கௌரவித்து சிறப்பித்தது.

இதுவரை 8 பெரிய அறைகளுக்கான



உறுப்பினர்கள் சேர்க்கை நிறைவடைந்ததைத் தொடர்ந்து 5 சிறிய அறைகளுக்கான உறுப்பினர்கள் சேர்ந்துள்ளார்கள்.

இன்னும் மூன்று உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளனர்.

சிறிய அறைகளுக்கான உறுப்பினர் நன்கொடை ரூபாய் 3 லட்சம் என நிர்ணயம் செய்துள்ளோம்.

உறுப்பினராக இணைபவரைத் தொடர்ந்து அவருக்குப் பிறகு இந்த உறுப்பினர் தகுதி அவரது குடும்ப உறுப்பினரில் ஒருவருக்கு சேர்ந்து விடும்.

ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்கள், மாதத்திற்கு 20 நாட்கள் வீதம் வருடத்தில் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் இதில் தங்கிச் செல்லலாம். இவர்களது உடமைகளையும் இவர்களது அறையிலுள்ள Locker-ல் பாதுகாப்பாக வைத்துச் செல்லலாம்.

**இன்னும் 3 உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளதால், வாய்ப்புள்ளவர்கள் உடனடியாகத் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.**

**ஸ்ரீ பகவத் மிஷனோடு உங்களது பந்தம் உங்கள் தலைமுறையையும் தாண்டி தொடரட்டும்...**

**அவர்களது வாழ்வும் சிறக்கட்டும்.**

அன்புடன்,

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3.

Cell : 99942 05880, 97891 65555.

# நிகழ்ச்சி நிழல்கள்




ஸ்ரீ பகவத் ஐயா தனது பேரன்
அபிநவ் - வின் பிறந்தநாளில் பேரனுடன்.



ஐயாவுடன்
ஜீவமணி, அன்புகரசி
தம்பதியர்.

## பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்பி வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் "பகவத் பாதை" தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

புதிதாக சந்தா செலுத்த விரும்புபவர்கள் இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| ஓர் ஆண்டு சந்தா | - | ரூ. 100/- |
| ஐந்தாண்டு சந்தா | - | ரூ. 500/- |
| ஆயுள் சந்தா | - | ரூ. 1000/- |

சந்தாத் தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Cheque மூலம் அனுப்பலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank - Sri Bagavath Mission A/c. No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம். Bank A/c-ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 7904118421 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

# அனைவருக்கும் ஓர் அன்பான வேண்டுகோள்



Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீபகவத் மிஷன் மீதும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மீதும் தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட நமது குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் மிஷனில் வருவாய் ஈட்டும் நோக்கத்தோடு எந்தச் செயலும் செய்வதில்லை.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானத் தெளிவை உலகம் முழுவதும் கொண்டு செல்ல வேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கம்.

இதன் காரணமாகவே ஐயாவின் அனைத்து நூல்களையும் மாத இதழ்களையும் இலவசமாக Download செய்து கொள்ளும் வசதியையும் குறைந்த விலையில் ஐயாவின் நூல்களையும் வழங்கி வருகிறோம்.

இது அனைவருக்கும் பயனுள்ள வகையில் இருக்கும்.

மேலும் ஐயாவின் ஆலோசனைப்படி தலைநகரமான சென்னையில் நமது ஸ்ரீ பகவத் பவன் அமைப்பதற்கான முயற்சியையும் செய்துவருகிறோம்.

மாதத்தில் பாதி நாட்கள் ஐயா சென்னையிலும் பாதி நாட்கள் சேலத்திலுமாகத் தங்கியிருப்பார்கள்.

ஸ்ரீபகவத் மிஷனைப் பொறுத்தவரையில் நாம் இரண்டு வகையான செயல்பாடுகளோடு பயணித்து வருகிறோம்.

1) ஐயா வழங்கும் ஞானத்தை உலகம் முழுவதும் எடுத்துச் செல்வது.

2) சென்னையில் ஸ்ரீபகவத் பவனை உருவாக்குவது மற்றும் ஸ்ரீபகவத் மிஷன் – ஸ்ரீபகவத் ஐயாவுக்கான பராமரிப்பு உட்பட அனைத்து அன்றாட நிர்வாகச் செலவுகளையும் எதிர்கொள்வது.

தற்போது புரவலர்களாக இணைந்து மாதம்தோறும் நிதி வழங்குபவர்களின் உதவியால் இதனை ஓரளவுக்கு எதிர்கொண்டு வருகிறோம். ஆனால் நாம் எதிர்கொள்ளும் செலவுகளுக்கு இது மிகவும் பற்றாக்குறையாகவே உள்ளது.

நமது அனைத்துச் செலவுகளையும் முழுமையாக எதிர்கொள்ளவும், சென்னை பகவத் பவன் அமைக்கவும், இதுவரை பெற்ற வட்டியில்லாக் கடனை திரும்பச் செலுத்தவும் ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் ஆகிய நம் அனைவரின் பங்களிப்பும் மிகவும் அவசியம்.

ஐயா மீது ஈடுபாடு கொண்ட நாம் அனைவரும் எளிதான ஒரு சிறிய பங்களிப்பை மட்டும் வழங்கும் பட்சத்தில் இந்த இரண்டாவது அம்சப் பிரச்சினை எளிமையாகிவிடும்.

இதனால் நமது முழுக் கவனத்தையும் முதலாவது முயற்சியை நோக்கி மட்டுமே வைத்துக்கொண்டால் போதும்.

சிறுதுளி பெருவெள்ளம் என்ற வகையில் நாம் அனைவரும் மாதம்தோறும் ரூபாய் 500/– வழங்கும் பட்சத்தில் நமது முழு முயற்சியும் வெற்றி பெறும்.

எனவே ஈடுபாடுகொண்ட உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் மாதந்தோறும் இதனை குறைந்தபட்சம் இரண்டு வருடங்களுக்கு மட்டுமாவது வழங்கி தங்களது பங்களிப்பை உறுதி செய்திடுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

(ரூ.500க்கு அதிகம் வழங்க விரும்புவோர் தங்கள் குழந்தைகள் பெயரிலும் வழங்கலாம்.)

அன்புடன்,

**ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.**

அனைவருக்கும் நல்வாழ்த்துகளுடன்

**ஸ்ரீ பகவத்,**

**Dr.N. கைலாசம், K.S. ஜீவமணி, V.A.P. சரவணன்**